# நாகூர்ப்

# புகைரத வழிச் சிங்கார ஒயிற் சிந்து



அதிராம்பட்டினம்

செய்யிது முகம்மது அண்ணாவியார்

# நாகூர்ப் புகைரத வழிச் சிங்கார ஒயிற்சிந்து



ஆசிரியர் :
**நவரத்தின கவி காதிறு முகிய்யித்தீன் அண்ணாவியார்**
அவர்களின் குமாரர்
**செய்யிது முகம்மது அண்ணாவியார்**
(1857 — 1934)

பதிப்பாசிரியர்:
**ஹாஜீ கே. எஸ். சையிது முகம்மது அண்ணாவியார்**

வெளியீடு:
**புலவர் அ. அஹ்மது பஷீர் எம்.ஏ., பி.எட்,**




[illegible]3, கரீம் சுபேதார் தெரு,
(ஐஸ் அவுஸ்)
இராயப்பேட்டை — சென்னை-600 014.

1000 copies

உரிமை: ஹாஜி கே.எஸ். சையிது முகம்மது அண்ணாவியார்

முதற்பதிப்பு: 1985

பக்கங்கள் : 8+48=56

இஸ்லாமியத் தமிழ் இலக்கியப் பேரவை (மயிலை) விழாவில் வெளியிடப் பெற்றது.

கிடைக்குமிடங்கள் :

அண்ணாவியார் பதிப்பகம்
29-பி, அண்ணாவியார் தெரு,
அதிராம் பட்டினம்

எஸ். வாவுப் பிள்ளை
புத்தக வியாபாரம்.
60, கடைத் தெரு,
அதிராம் பட்டினம்

பிலால் பதிப்பகம்
20-சி, பெரிய நெசவுத் தெரு
அதிராம் பட்டினம்

சிங்கைப் பதிப்பகம்
23, கரீம் சுபேதார் தெரு
சென்னை-14

விலை ரூ. 4-00

அச்சிட்டோர்: வெற்றி அச்சகம், சென்னை-14.

# தோரணவாயில்

புலவர் அதிரை அ. அஹ்மது பஷீர் எம்.ஏ. பி.எட்.

சந்த நயங்கள் சிந்தித் ததும்பும் சிந்து, செந்தமிழ் இலக்கிய வகைகளில் ஒன்று. செந்தமிழுக்குச் சொந்தக்காரர்கள் அதிரை அண்ணாவியார்கள். பள்ளி வைத்துத் தமிழ் வளர்த்த பரம்பரை அது. அந்த நெடிய பரம்பரையினர் புலமைச் சிகரத்தை எட்டிப் பிடித்து வெற்றி கண்டவர்கள். புலமைச் செருக்கடைந்தாரை அடக்கப் பேரிலக்கியமும் புனைந்தனர். பாமரரை மகிழ்விக்கச் சிறு பனுவல்களும் பாடினர். எதனை இயற்றியபோதும் தம் தனி முத்திரையை பதிக்க மட்டும் தவறவில்லை. இதனை இந்நூல் நெடுகிலும் பரக்கச் காணலாம்.

நாகூருக்கும் அதிரைக்கும் இடையில் புகை வண்டிப் பாதை போடப்பட்ட காலத்தில் பாடப்பெற்ற நூல் இது.

இராமநாதபுர மாவட்டம் சேதுக்கரையில் தொடங்கி காசி வரை செல்லும் கடற்கரைப் பெருவழி சேது சாலை என்று இன்றும் அழைக்கப்படுகிறது. சேது சாலை அதிராம் பட்டினம் வழியாகவே செல்கிறது. தெற்கிலிருந்து வடக்கு நோக்கிச் செல்லும் பயணிகள் அனைவரும் தங்கிச் செல்லும் பெருவழித் துறையாகவும் பழம்பெரும் துறைமுகப் பட்டினமாகவும் அதிராம் பட்டினம் இலங்கியது. உலகளந்த வளநாடு எனச் சோழர் காலத்திலும், செல்வநாடு எனப் பாண்டியர் காலத்திலும் செல்லி நகரம் என்று சேதுபதிகள் காலத்திலும் அதிவீரராமன் பட்டினம் என்று பிற்காலத்திலும். அபதான், அபாத்து, அத்ரமீ, என்றெல்லாம் அரபுகளாலும் அழைக்கப்பட்ட இவ்வூர் அதிவீரராமனின் ஆளுகைக்கு உட்பட்டிருந்தது.

தமிழ் அரசர்கள் எழுப்பிய அரண்மனைகளும் ஆலயங்களும், அரபு மக்களின் குடியேற்றமும், ஆங்கிலேயர் மற்றும் போர்ச்சுகீசியர்களின் குடியிருப்புகளும் இங்கு அமைந்திருந்தன. அதிவீரராமனின் கோட்டை இடிபாடுகளை அண்மைக் காலம் வரை காணமுடிந்தது. அவர் காலத்தில்

பெய்த மண்மாரி பற்றிய செவிவழிச் செய்திகள் இன்னும் தாய்மாரின் நாவிலிருந்து வெளிவந்த வண்ணம் உள்ளன. இவ்வூரில் அடங்கப் பெற்றுள்ள ஹலரத் காஜா ஒலி நாத ரின் அடக்கவிடத்தின் மீது தஞ்சை சரபோஜி மன்னன் எழுப்பிய அழகிய மணிமண்டபம் (தர்கா) ஈடும் எடுப்பும் இன்றி எழிலோடு விளங்குகிறது. புகை ரதவழிச் சிந்தின் ஆசிரியரும் இவற்றைக் குறிப்பிட மறக்கவில்லை.

''ஆரணி யங்கமழ் தோரண வீதி
அலங்காரங் கொத்தளங் கோட்டை—சிங்
காசன மாளிகை கோபுரமும் பள்ளி
அன்ன சத்திரங்கள் பாட்டை — நளன்
காரணிக்கம் உள்ள நடைதஞ்சொன்ன
காவலன் விற்பனன் சிரெட்டை — ஆள்கைக்
காரன் அதிவீர ராமன் பதிநகர்
கண்டோதி வா பாங்கி வீட்டை'' (பக்கம் 23)

(ஆரணியம்—காடு,சோலை; பாட்டை—வழி; காரணிக்கம்—கதை விற்பனன்—கல்வியிற் சிறந்தவன் சிரேட்டை—சிறப்புள்ளது.)

ஊருக்குள்ளே பதினாறு குளங்களும், குளக்கரையில் எழிலோடு அமைந்துள்ள பள்ளிவாயில்களும், அதி ரையின் அழகுக்கு அழகு சேர்ப்பவை. அங்கு வாழ்வோர் செம்மையான ஒழுக்கம் பூண்டவர் என்கிறார் ஆசிரியர்.

''தோரணிக் கொடிகள் நிறைந்த தெருக்கள்
சீரியர் செய்யிது செய்குமார் குருக்கள்
நேரணி குளங்கள் அடர்ந்த தருக்கள்''

(பக்கம் 23)

ஆம்! மனவளமும், எழில்நலமும் உடைய ஊர் அதிராம் பட்டினம்.

''ஆசை தருங்கோடி அதிசயங்கள் கண்டதிலே
ஓசை தரும் இன்பம் உவமையிலா இன்பமன்றோ''

—என்றார் பாரதி. இப்புகை ரத வழிச் சிந்தின் ஒவ்வொரு வரியும் இழும் எனும் ஒலியுடன் இணைந்து இயங்குகின்றது,

ரயில் தூரத்தே நெளிந்து ஊர்ந்து வருகின்ற போது காட்டு மரவட்டையைப்போல காட்சியளிக்கிறது. நூற்றுக் கணக்கான அதன் சக்கரங்கள் மரவட்டையின் கால்களைப்

போல அடுத்தடுத்து நடக்கின்றன. நீண்ட தூரத்தில் பார்த்தபோது வியப்பளித்த ரயில் நெருங்க நெருங்க அச்சம் விளைக்கின்றது. பாலைவனத்தின் கொள்ளி வாய்ப் பிசாசு போல ஊளையிட்டு வருகின்றது. இன்னும் அருகில் வந்த போது அதன் கடபட ஒலி வான் இடிச் சத்தம்போல் காதைப் பிளக்கின்றது. அதனால் எல்லாம் அஞ்சிவிடலாமா எவ்வளவு அழகான ரயில்! ஆசை வார்த்தை கூறித் தலைவியைத் தேற்றும் விதம்—ஏற்றும் விதம் சுவையானது.

**கானுறும் அட்டையின் கால்கள் எனவுருள்**
**கருநந்தூர்தல் இஞ்சீனே—கொடுங்**
**கனல் மலிந்திடும் பாலையின் கொள்ளிவாய்க்**
**கணத்தின் மூச்சி தோ தானே—கோடை**
**வான்இடிச் சத்தம்போல் குமுறுதலைக் கண்டு**
**மயங்காதே மைடியர் மானே—சித்ர**
**வர்ணக் கிளிட்டிட்ட தங்க மயம் ரெயில்**
**வண்டியில் ஏறடி தேனே** **பக்கம் 25)**

**(கருநந்தூர்தல்—அச்சம் எழுப்பி ஊர்தல்)**

வண்டியில் ஏறிய உடன், ''பஸ்டுக் கிளாசான வண்டியும் வாய்த்தது'' என்றும்

**''மயிர் சூடிய மலர்வாடுமுன்**
**ஒயில் நாகையில் ரயில் ஏகிடும்''** (பக்கம் 25)

என்றும் தலைவியைத் தேற்றுவது இன்பம் பயப்பதாக உள்ளது.

''மீன் போன்ற வரிக் கண்கள், சினைவராலை நிகர்த்த கால் விரல்கள் பவளக் கொடி போன்ற கைகள்'' இப்படி அடுக்கிச் செல்லும் உவமைகள் ஏராளம். இந்நூலிற் காணப் படும் நகைகள், நதிகள், குளங்கள் ஊர்கள் யாவும் அதிரை மக்களோடு நீங்காத தொடர்புடையவை.

கவிதைச் சுரங்கத்துள் நுழைந்து எண்ணற்ற வைர மணிகளை எடுத்து மகிழலாம்.

''இன்பத் தமிழ் எமது—என்றும் இதய உணர்வினை ஊட்டிடும் அமுது'' என்னும் பூரிப்போடு நூலைத் தங்கள் கைகளில் தவழ விடுகிறோம்.

## அதிராம்பட்டினம் அண்ணாவியார் குல திலகங்கள் இயற்றிய அரிய நூல்கள்

### வெளிவந்துள்ளவை

மதீனக்கலம்பகம் — ஜீவரத்தின கவிராஜர்

மகுடி நாடகம்— ,, ,,

மழைப்பாட்டு—சொர்ணகவி

விடுகதைக் கணக்குப் பாடல்கள் ,,

கொ. ஆலிம் சாஹிபு அவர்கள் மீது சரமகவிகள்—
செய்யிது முகம்மது அண்ணாவியார்

நாகூர்ப் புகைரதவழிச் ,,

சிங்கார ஒயிற்சிந்து ,,

சுப்பிரமணியர் பிரசன்னப் பதிகம்— அமிர்த
மதுரகவி செய்யிது முஹம்மது அண்ணாவியார்

### வெளிவர இருப்பவை

பிக்ஹு மாலை — நவரத்தினகவி

அலி நாமா — அமிர்த மதுரகவி

நூறு நாமா — அமிர்த மதுரகவி

கியாமத் மாலை — சொர்ணகவி

'கொம்பு' 'ர'வ் இல்லாத வண்ணம்— ,,

பாசிப்பட்டணம் வழிநடைச் சிந்து ,,

*அஸ்வ மேதயாகம் — அமிர்த மதுரகவி

*மகாபாரத அம்மானை — அமிர்த மதுரகவி

*வாட்சா ராவுத்தர்
திருமணப்பவனி —ஜீவரத்தின கவிராஜர்

---

*இம் மூன்று நூல்களும் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழக வாயிலாக வெளிவர உள்ளன.

நாகூர்ப் புலவரத வழிச் சிங்கார வொயிற் சிந்து

# ஆய்வு முன்னுரை

பேராசிரியர் டாக்டர் சேமுமு முகமதலி
எம்.ஏ., பிஎச். டி.
தமிழ்த்துறைத் தலைவர்,
சாயிதேமில்லத் ஆண்கள் கல்லூரி
சென்னை-600 073.

இறையருளால் இஸ்லாமியர்கள் தமிழ் இலக்கியத்தில் காப்பியம் முதற்கொண்டு பல்வேறு வகையான சிற்றிலக்கியங்கள் உள்பட அனைத்துத்துறைகளிலும் எண்ணற்ற படைப்புக்களைப் படைத்து அவனிக்கு அளித்து அருந் தொண்டாற்றி வருகின்றனர். புதிய காப்பியங்களைக் காணமுடியாது வாட்டம் கொண்டிருந்த காலத்தில் வாட்டமுற்றோரின் தேட்டத்தைப் போக்கும் வகையில் சீறாப்புராணம் போன்ற காப்பியங்களைத் தந்த பெருமை இஸ்லாமியர்களைச் சாரும். அது மட்டுமின்றிச் சிற்றிலக்கிய வகைகளிலே படைப்போர், நாமா, கிஸ்ஸா, மஸ்அலா, முனாஜாத்து போன்ற புதிய வகை இலக்கியங்களைப் படைத்துக் காட்டிய சிறப்பும் இஸ்லாமியர்களுக்கு உண்டு. எத்துறையாயினும் அத்துறையினுள் எல்லாம் உட்புகுந்து இலக்கியம் படைத்துத் தங்களது ஆற்றலை நிலைநாட்டித் தமிழுக்கு வேண்டிய தொண்டினை ஆற்றிய இஸ்லாமியர்கள் சிந்து இலக்கியங்களிலும் சிறந்த படைப்புக்களைப் படைத்துள்ளனர்.

தொண்ணூற்றாறு வகையாகத் தொடக்கத்தில் இருந்த சிற்றிலக்கியங்கள் பிற்காலத்தில் இருநூற்றுக்கு மேற்பட்ட வகைகளில் பல்கிப்பெருகின. அவ்வாறு பெருகிய

சிற்றிலக்கிய வகைகளுள் சிந்து இலக்கியமும் ஒன்றாகத் திகழ்கிறது. அடியார்க்கு நல்லார் சிந்து இலக்கியத்தைக் கூத்து இலக்கிய வகைகளுக்குள் அடக்கிக் குறிப் பிட்டுள்ளார்.

"அளவும் சிந்தும் வெள்ளைக்குரிய" எனும் தொல் காப்பியச் சூத்திரத்தில் சிந்து என்ற சொல் சிந்தடியைக் குறித்து நிற்கும். இதன் அடிப்படையில் மூன்று சீர்களைக் கொண்ட சிந்தடிகளால் பாடப்பெற்றன சிந்துப் பாடல் களாயின. எனினும், இவ்விதி வழக்கில் மறைந்து போயிற்று.

பன்னிரண்டாம் நூற்றாண்டில் பக்திப் பாசுரங்களில் சிந்துப்பாடல்களின் தாக்கத்தைக் காணமுடிகிறது. அக் கால எல்லையில் சிந்து என்பது அடி என்ற வரையறையில் இருந்து ஓசை என்ற நிலைக்கு வளர்ந்து சிந்துப்பாடலாக உருவெடுத்தது, தனி இலக்கிய வகை என்ற அமைப்பில் 19-ஆம் நூற்றாண்டில் தனி நூலாக வடிவம் கொண்டது.

'சிந்தொக்கும் சொல்லினார்' என்ற கம்பராமாயண வரியில் சிந்து என்பது பண், இசை என்ற பொருளில் வந்துள்ளது. இசைப்பாடலான சிந்துப்பாட்டு வரிப்பாட்டு விற்பாட்டு போன்று சந்தவகையால் பாகுபாடு உற்றது எனலாம். இசைப்பா வகையில் அமைந்த சிந்துப் பாடல்கள் நாட்டுப்புறப் பாடல் வகைகளைச் சார்ந்தே அமைந் துள்ளதனையும் நாம் உணரலாம்.

இஸ்லாமியர்களின் சிந்து நூல்களில் சில:—

**நூலின் பெயரும் — ஆசிரியரும்**

1. பூவடிச் சிந்து — காளை அசனலிப் புலவர்
2. ஒலி நாயகர் அவதாரச் சிந்து — மஹ்மூது இபுறாகிம் லெப்பை கலிபா சாகிபு

3. பயஹாம்பர் அவதாரப் பலவண்ணச் சிந்து — மதுர கவி செய்கு அப்துல் காதிறு
4. நவநீதரத்னாலங்காரச் சிந்து — சீனிக்காதிறு முகியத்தீன்
5. சிங்கார வழிநடைச் சிந்து — செ. ஆ. சீனியாபில் ராவுத்தர்
6. காரண அலங்காரச் சிந்து (1916) — சிக்கந்தர் ராவுத்தர்
7. வழிநடைச் சிந்து (1913) — அப்துல்லா சாகிபு
8. பாசிப்பட்டணம் வழிநடைச் சிந்து (1852)—சொர்ண கவி நயினார் முகம்மது பாவாப் புலவர்
9. திருக்காரணச் சிந்து (1915) — முகம்மது பாவா லெப்பை
10. வழிநடைச் சிந்து (1915) — முகைதீன் கனி
11. மெய்ஞ்ஞானச் சிந்து (1898) — பீர் முகைதீன் புலவர்
12. வழிநடைச் சிந்து (1888) — க.ப.மு. முகைதீன் பிச்சைப் புலவர்
13. அண்ணாமலைச் செட்டியார் அலங்கோலச் சிந்து (1912) — முகம்மது அப்துல் கறீம் மஸ்தான் சாகிபு
14. அதிசய வெள்ளச் சிந்து (1913) — ஆதம் சாகிபு
15. பெருமழைச் சிந்து (1913) — அப்துல்லா சாகிபு
16. வடிவலங்காரச் சிந்து (1914) — சிதம்பரம் உசைன் சாகிபு
17. விபரீதச் சிந்து (1914) — சிதம்பரம் உசைன் சாகிபு
18. பலவர்ணச் சிந்து 1919 — அப்பாஸ் ராவுத்தர்
19. எண்ணெய்ச் சிந்து (1876) — மரைக்காயர் புலவர்

20. வழிநடைச் சிந்து — அருள்வாக்கி அப்துல் காதிறு
21. வழிநடைச் சிந்து — செய்கு அலாவுதீன்
22. கப்பற் சிந்து (1899) — முகம்மது ஹம்ஸா லெப்பை
23. தறிச்சீர் கப்பற் சிந்து (1895) — முகைதீன் பிச்சை
24. கப்பற் சிந்து — பாட்சாப் புலவர்
25. நாகூர்ப்புகைரத வழிச் சிங்கார வொயிற் சிந்து(1902) செய்யிது முகம்மது அண்ணாவியார்
26. வழிநடைச் சிந்து — சிந்துரத்னக் கவிராயர் இராவுத்தர் நெய்னா முகம்மது
27. அபுருப ரெத்தின அலங்காரச் சிந்து — பலர்
28. அறுபது கோடிச் சிந்து — எம்.கே.ஏ. அப்துல் அஜீது
29. இன்னிசைச் சிந்து — செ. மு. செய்யிது முகம்மது ஆலிம்
30. காரணச் சிந்து — எம்.எல்.எம். புலவர்
31. மெய்ஞ்ஞான விகசிதா ரத்தினச் சிந்து — சே. செ. முகம்மது ஷாஹு மஸ்தான் சாகிபு
32. ரத்தினச் சிந்து—சே.செ. முகம்மது ஷாஹு மஸ்தான்
33. பத்தமடைத்தீக்கோல் அதிசயச் சிந்து (1910) — ஆசிரியர் தெரியவில்லை
34. சேலம் பிளேக் சிந்து (1910) — ஜானியா சாகிபு
35. ரெயில் நடை பொட்டல்புதூரி கந்தூரி அலங்காரச் சிந்து (1907) — சாகுல் ஹமீதுப் புலவர்
36. மியாங்கு தர்கா வழிநடைக் காரண அலங்காரச் சிந்து முதல் பாகம் (1910) — அப்துல் கறீம் சாகிபு
37. மியாங்கு தர்கா வழிநடைக் காரண அலங்காரச் சிந்து இரண்டாம் பாகம் — அப்துல் கறீம் சாகிபு
38. நாகூர் வழிநடைச் சிந்து (1910)—நெய்னா முகம்மது

39. வழிநடை அலங்காரச் சிந்து (1923) — அப்துல் ரகுமான்

40. இந்திய தேசாபிமான அலங்காரச் சிந்து (1922) — என்.ஏ. அப்துல் லத்தீப்

41. ரஞ்சிதச் சிந்து (1921) — இபுராம்ஷா ராவுத்தர்

42. விபரீத பிளேக் சிந்து (1921) — ஆர். எம். காதர் முகிய்யதீன் ராவுத்தர்

43. ஓதன ராமச் சடோபுரச் சிந்து (1924) — எஸ்.பி.கே. காதர் முகிய்யதீன் ராவுத்தர்

44. கடுங்கொலைச் சிந்து (1922) — ஆசிரியர் தெரிய வில்லை

45. ஜெயரூபலாவணியச் சிந்து (1925) — நூருத்தீன் முகம்மது ஜமால் லெப்பை ஆலிம் புலவர்

46. பரிமளத்தூர் அலங்கோலச் சிந்து (1925) — எஸ்.வி. பீர்முகம்மது சாகிபு

47. மதுவிலக்கு மாமணிச் சிந்து (1925) — பீ.க. பகுறுத் தீன் சாகிபு

48. காரணச் சிந்து (1924) — காதர் சாகிபு நாவலர்

49. மேலப்பாளையம் சங்கத்து அலங்காரச் சிந்து (1921) — முகம்மது அலி, ஆதம் சாகிபு

50. அருங்கொலைச் சிந்து (1925) — முகம்மது அலிப் பாவலர்

51. வெள்ளம் பெருகின விபரீதச் சிந்து (1924) — முகம்மது அலிப் பாவலர்

52. வழிநடை அலங்காரச் சிந்து (1921) — முகம்மது காசிம்

53. ஏர்பாதி வழிநடை அலங்காரச் சிந்து (1921) — முகம்மது மொஹிதீன் ராவுத்தர்

54. பொட்டல்புதூர் கந்தூரி மகத்துவச் சிந்து (1922) — முகம்மது ஷேக் மியான்

55. கழுத்தரிந்த சிந்து (1925) — ஏ.என்.வி. முகிய்யதின் அப்துல் காதர்

56. திருச்சி காவேரி வெள்ளச் சிந்து (1924)—ஜன்னப்பா சாகிபு

57. நாசித்தூள் அலங்காரச் சிந்து (1901) — ஆசிரியர் தெரியவில்லை

58. கழுத்தரிந்த சிந்து (1924) ஏ.ஏ. ஹாதி

59. கதர் தேசபக்தர் புகழ் அலங்காரச் சிந்து (1924) — டி.எம். ஜன்னாப் சாகிபு

60. காந்தி தொண்டர் புகழ் அலங்காரக் காவடிச் சிந்து (1924) — டி.எம். ஜன்னாப் சாகிப்

61. கர்ணகை நொண்டிச் சிந்து (1925) — ஏ. இஸ்மாயில் கான் சாகிப்

62. மூளி அலங்காரி நொண்டிச் சிந்து (1925) — ஏ. இஸ்மாயில் கான் சாகிப்

63. பிரான்மலை வழிநடைச் சிந்து (1922) — பக்கிரி முகம்மது லெப்பை சாகிப்

சென்னிகுளம் அண்ணாமலை ரெட்டியாரால் 1865ல் பாடப்பெற்ற காவடிச்சிந்து எனும் நூல்தான் சிந்து நூல்களுள் முதன்மையாகப் பலரால் கருதப்பட்டு வருகின்றது. ஆனால், 'பாசிப்பட்டணம் வழிநடைச் சிந்து' **சொர்ணகவி நயினா முகம்மது பாவாப் புலவரால் 1852-ல் பாடப்பெற்றதாகத் தெரிகிறது.** இதைக் கொண்டு நோக்கின் முதல் சிந்து இலக்கியம் இஸ்லாமியர்களுடையதாக அமையும் இச் செய்தி இன்னும் விரிவாக ஆய்வு செய்யப்பட வேண்டியதென்றாகும்.

1887-ல் சகல கலா நிலையம் 'பீபிள்ஸ் பார்க் வழி நடைச்சிந்து' எனும் நூலை வெளியிட்டுள்ளது. இந் நூலில் 'சின்ன காலேஜ்' எனப்படும் 'பீபிள்ஸ் பார்க்'கும் மயிலை அறுபத்து மூவர் திருவிழாவும் காண மனைவியை அழைத்துச்சென்றவர் சென்னையைச் சுற்றி வந்த 'வழி நடை'யைக் குறிக்கிறது. இந்நூலை இயற்றியவர் யாரென்பது குறிப்பிடப் பெறவில்லை- இந்நூலிருந்து சிறிது மாறுபட்ட நிலையில் 'பீபிள்ஸ் பார்க்' மற்றும் அறுபத்து மூவர் திருவிழாக் காணத் தலைவன் தலைவியை அழைப்பது போன்ற வகையில் க. ப. மு. முகைதீன் பிச்சைப்புலவர் ஒரு வழிநடைச்சிந்தை 1888-ல் பாடியுள்ளார் எனத் தெரிகிறது. இவ்விரு நூல்களும் ஒன்று தாமா? அல்லது இவ்விரு நூல்களின் ஆசிரியரும் ஒருவர்தாமா? அல்லது வெவ்வேறு நூல் வெவ்வேறு ஆசிரியர் எனில் இரண்டிற்கு முள்ள தொடர்பு என்ன? என்பனவெல்லாம் சிந்து இலக்கிய ஆய்வாளர்களின் சிந்தனைகளுக்குரியனவாகும்.

சிந்து இலக்கிய நூல்களைக் கொண்ட பொருளைக் கொண்டு வழிநடைச்சிந்து, கொலைச்சிந்து, விபத்துச்சிந்து, நீதிச்சிந்து, நொண்டிச்சிந்து எனப் பல வகைகளாகப் பிரித்துக் காணலாம். இஸ்லாமியர்களது சிந்து நூல்களில் பல வழிநடைச் சிந்துவகைக்கும், அண்ணாமலைச் செட்டியார் அலங்கோலச்சிந்து போன்றன கொலைச் சிந்து வகைக்கும், அதிசய வெள்ளச்சிந்து, பெருமழைச்சிந்து முதலியன விபத்துச்சிந்து வகைக்கும், மெய்ஞ்ஞானச்சிந்து போன்றன நீதிச்சிந்து வகைக்கும் ஏற்ப அமைந்துள்ளன,

செய்யது முகம்மது அண்ணாவியார் அவர்களால் இயற்றப் பெற்ற 'புகைரதவழிச் சிங்கார வொயிற் சிந்து' 294 வரிகளாலாகிய 66 பாடல்களைக் கொண்டதாக 1902ஆம் ஆண்டு அரங்கேற்றம் செய்யப்பட்டது. புகை வண்டிப் பயணத்தைக்கொண்டு சாகுல் ஹமீதுப் புலவரால் 1907-ல் 'ரெயில்நடை பொட்டல்புதூர் கந்தூரி அலங்காரச்

சிந்து' பாடப்பெற்றது. 1923ஆம் ஆண்டு வீரபத்திரர் என்பவரால் இயற்றப் பெற்ற 47 கண்ணிகளை உடைய 'தென்னிந்திய ரயில்வே எனும் கர்னாடகப் புகைவண்டியின் சிந்து' எனும் நூல் சங்கநிதி விளக்க அச்சகத்தால் வெளியிடப்பட்டது, இதைப் போன்று 1923ஆம் ஆண்டிலேயே திருநெல்வேலி ஆரியப் பிரகாசினி பிரசினரால் ஆறுமுகனேரி கே. விசுவநாதபிள்ளை என்பவரால் 47 பாடல்களை உடைய 'செந்தூர் ரெயில்வழி நடைச்சிந்து' எனும் நூல் வெளிவந்துள்ளது. இவற்றை நோக்கும்போது **புகைவண்டி வழிநடைச்சிந்து நூல்களில் செய்யிது முகம்மது அண்ணாவியாரின் இச் சிந்தே முதல் சிந்து எனக் கொள்ளலாம்.**

பிறரது நூல்கள் ரெயில்வழி நடைச்சிந்து என்றும், புகைவண்டிச் சிந்து என்றும் பெயர்பெற்றுள்ளபோது இந்நூல் **'நாகூர்ப் புகைரதவழிச் சிங்காரவொயிற் சிந்து'** எனப் பெயர் பெற்றுள்ளமை நோக்குதற்குரியதாகும், **புகைவண்டி** எனக் குறிப்பிடாது **புகைரதம்** எனக்குறிப்பிடப்பட்டுள்ளதிலிருந்து புகைவண்டி எத்தகைய அபூர்வப் பொருளாக மக்களின் வியப்பிற்கும், ஏறிச்செல்ல விழையும் பெரும் ஆர்வத்திற்கும் உரிய பொருளாக—விளங்கியிருக்குமென்பது எண்ணி மகிழ்வதற்குரியது. மேலும் அற்புதம், கருணை, சாந்தம் முதலிய நவரசங்களுள் ஒன்றான 'சிங்கார ரசத்தை இந்நூல் நல்குவதால் 'சிங்காரம்' என்ற சொல்லும் நூலின் பெயரில் இடம் பெற்றிருக்கக்கூடும். 'ஒயில்' என்ற சொல்லுக்கு அலங்காரம், ஒய்யாரம், அழகு எனப் பொருள் கொள்வர். இவற்றைக்கொண்டு நோக்கின் நூலின்பெயர் அதிவீரராமன் பட்டினத்தில் இருந்து நாகூர் செல்லும் புகைரத வழி, சிங்கார ரசத்தை நல்கும் அழகான சிந்து என விரிவடைவதைக் காணலாம்.

லெ. மு. முகிய்யதீன் பகீர், முத்தண்ண பிள்ளை, **பண்டிதம் முகம்மது அபூபக்கர், ப. கா. பண்டிதம் செய்யி**

தப்துல் காதிறு, அ. ரு. கந்தசாமி ஆகியோரின் சாற்று கவிகள் இந்நூலுக்கும், நூலாசிரியருக்கும் பெருமை சேர்க்கின்றன. இந் நூலாசிரியரின் சகோதரர் ஹபீப் முகம்மது அண்ணாவியார் மதீனக் கலம்பகத்தை அச்சிட்டபோது, சமயச் சார்பின்றி அனைவரும் போற்றும் அறிவுக் களஞ்சியமாம் குலாம் காதிறு நாவலர், ''தேனமரும் கவி மாரி பொழியும் மேகம், சீவரத்னக் கவிராஜ சிங்க மன்றே'' என ஜீவரத்ன கவி செய்யிது மீரா லெப்பை அண்ணாவியாரைப் பாராட்டிச் சாற்றுக் கவி தந்துள்ளார். அந்நாவலர் பெருந்தகையே இந்நூலாசிரியரின் தந்தை நவரத்ன கவி காதிறு முகிய்யதின் அண்ணாவியாரின் பிக்ஹு மாலைக்கு அழகியதோர் உரை அருளிச் செய்துள்ளார். இச் சிந்து நூலில் ஆசிரியர்,

''காரண நாயகர் தர்ஹா மகா வித்துவான்
கற்றோர் துதிக்கும் உஸ்தாது—குலாம்
காதிறு நாவலர் தரிசனத்தில் நம்
கவியரங்கேற்று மாது''

என்று குறிப்பிட்டுள்ளார். அறிவுக் கருவூலமாம் நாவலரது தரிசனத்தில் இச் சிந்து அரங்கேற்றப்பட்டிருப்பது நூலின் பெருமையை மேன்மேலும் உயர்த்துகிறது.

பெரும்பாலும் சிந்து இலக்கிய நூல்களில் காப்புச் செய்யுள் வெண்பாகவே அமையும் மரபினையொட்டி இந்நூலின் காப்புச் செய்யுளும் அமைந்துள்ளது. பிக்ஹு மாலையின் பாயிரத்தில், ''...பிக்ஹு மாலையதனைப் பேணு தமிழிற்பாட ஹக்கனே நீ அருள்வாய் காப்பு'' என்று தந்தை இஸ்லாமிய மரபில் இம்மியும் பிறழாது காப்புச் செய்யுள் பாடியது போன்று, தனயனும் ''ரெயில் சிந்து பேசுதற்கு நேராரும் உத்தமப் படைப் பனைத்து முற்றமைத் தளித்தழிக்கும் கத்தனைத் துதித் தனித்தந்

காப்பு'' எனப் பாடியிருப்பது ஒப்பு நோக்கி இன்புறற் பாலது.

தென்னிந்திய ரயில்வே எனும் புகை வண்டிச் சிந்தில் சென்னையிலிருந்து நேர்மார்க்கமாகத் தஞ்சை வரையிலும், பின் தஞ்சையிலிருந்து நாகப்பட்டினம் வரையிலும், அதன் பின் திருச்சியிலிருந்து திருநெல்வேலி, தூத்துக்குடி வரையிலும் செல்லும் பயணம் குறிக்கப் பெற்றுள்ளது. அச்சிந்து நூலில் 'பாரு, பாரு பயாஸ்கோப்புப் படம் பாரு' என்பது போல இடைப்பட்ட எல்லாப் புகைவண்டி நினலயங்களின் பெயர்கள் மட்டும் நீண்ட பட்டியலாக எடுத்துக் காட்டப் பட்டுள்ளன. செந்தூர் ரெயில் வழி நடைச் சிந்தில் திருநெல்வேலியிலிருந்து திருச்செந்தூர் வரையில் இருப்புப் பாதை அமைக்கப் போடப்பட்ட திட்டம், திட்டமிட்ட ஆண்டு அமைப்பதற்கு உதவியாக இருந்தவர்கள், அமைத்து முடிக்கப்பட்ட ஆண்டு, முதன்முதல் இரயில் ஓடிய ஆண்டு முதலியன பற்றிய வரலாற்றுச் செய்திகள் பல பாடல்களில் கூறப் பெற்றுள்ளன. அதன் பின்பே இடைப்பட்ட புகை வண்டி நிலையங்கள் மற்றும் திருச்செந்தூர் முருகன் சிறப்பு போன்றன எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. ரெயில் நடை பொட்டல்புதூர் கந்தூரி அலங்காரச் சிந்திலும் புகை வண்டிப் பயணத்தைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. எனினும் இம்மூன்று நூல்களில் இருந்தும் அமைப்பு மற்றும் அணுகு முறைகளில் மாறுபட்டு நாகூர்ப் புகை ரத வழிச் சிந்து சுவைபடச் சிறப்பாக விளங்குகிறது.

நாகூர் ஷாஹுல் ஹமீது ஒலி அவர்களுடைய 'ரவ்லா ஷரீபை'க் கண்டு நேர்ந்து வர நாயகியை நகை அணியக் கூறுவதிலிருந்து நூல் தொடங்குகிறது. நகையலங்காரம் முடிந்து, இல்லத்திலிருந்து புகைவண்டி நிலையத்திற்குச் செல்லும் வழியில் காணும் அதிவீரராமன் பட்டினத்துச் சிறப்புகள் எடுத்துரைக்கப் பெறுகின்றன. புகைவண்டி

அதிவீரராமன் பட்டினத்திலிருந்து நாகூரை அடையும் மார்க்கத்தில் இடைப்பட்ட ஊர்களான தம்பிக்கோட்டை, முத்துப்பேட்டை, தில்லைவிளாகம், பாண்டி, திருத்துறைப் பூண்டி. திருநெல்லிக்காவல், திருவாரூர், அடியக்கமங்கலம், கூத்தூர், கீவலூர், சிக்கல், நாகப்பட்டினம்-கடற்கரை, நாகப்பட்டினம், வெளிப்பாளையம் முதலியவற்றின் சிறப்புகள் அவ்வப்போது புகைவண்டி அவ்வூர் நிலையங் களைக் கடக்கும்போது வெளிக் கொணரப்பட்டுள்ளன. இவ்வூர்களுள் பெரிய ஊர்களான திருத்துறைப்பூண்டி. திருவாரூர், நாகப்பட்டினம் ஆகியவற்றின் சிறப்புகள் விரிவாகவே கூறப்பட்டுள்ளன. நாகூரின் சிறப்பு தெருக்கள் கடைகள் அமைந்திருக்கும் விதம், தர்காவின் அமைப்பு முதலியன உற்று நோக்கப்பட்டுப் பாடப் பெற்றுள்ளன. இறுதியில் ஷாஹுல் ஹமீது ஆண்டகை, யூசுப் நாயகம் ஆகியோரை 'ஜியாரத்' செய்து முடித்து ஊர் திரும்ப முனைவதுடன் நூல் முழுமை பெறுகிறது.

நாட்டுப்புற இலக்கியங்கள் மக்களுடைய நாகரிகம், பண்பாடு, பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள் முதலிய வற்றினை எடுத்துக் கூறுவனவாக அமைந்துள்ளதனைக் காணலாம். எனவே அந்நாட்டுப்புற இலக்கிய வகையைச் சார்ந்ததாகக் கருதப்படும் சிந்து இலக்கியத்திலும் அவ்வப் பகுதி மக்களுடைய நாகரிகம், பண்பாடு,பழக்க வழக்கங்கள் முதலியன எடுத்துக் கூறப்பட்டுள்ளதில் வியப்பு இருக்க முடியாது. இச்சிந்து நூலிலும் அணியும் ஆபரணங்கள், ஆடைகள் உள்ளிட்ட பழக்க வழக்கங்கள், பண்பாட்டுக் கூறுகள் அதிகமாகவே காண முடிகின்றன.

மல்லிகை, முல்லை, இருவாட்சி, சண்பகம், தாமரை, ரோஜா மலர்களை மகிழ்ந்து சூடும் செய்தியை அறிய முடிகிறது. மங்கையர் அணியும் நகை வகைகள் நமக்கு மலைப்பைத் தருகின்றன. இந்நூலில் காணப்படும் தலை வகிடுடன் வந்து நெற்றியில் பதியும் நெற்றிச்சுட்டி, நெற்றி

யைச் சுற்றி அமைந்த வட்டணி, தலையின் இரு பக்கங் களிலும் அணியும் பிறைச் சுட்டிகள், காதுக் கொப்பிலிருந்து கொண்டையில் மாட்டப் பெறும் மயிர்மாட்டி, இன்றைய அல்லிக்கொத்து அல்லது வாளி அரசிலை போன்ற காதில் அணியும் கொப்பலக் கொத்து, கொடி போன்ற காதணி யான வள்ளை வல்லிகை மற்றும் ஒன்னப்பூ, ஜிமிக்கி போன்று தொங்கும் கும்மத்துத் தொங்கல், மூக்கின் ஒரு பக்கத்தில் சிறு வளையம் போன்று அணியப் பெறும் நத்து, மூக்கு நடுவில் மேலு தட்டை நோக்கித் தொங்கும் புல் லாக்கு, கழுத்தணிகளாகிய உயர்ந்த கல் பதித்த பதக்கம், கண்டிகை, முத்துப் பூமாலை, பூசாந்தரத் தாலி அல்லது பொற்றாலி, புயத்தில் அணியும் கடகம், மணிக்கட்டில் அணியும் கங்கணம், கை வளையல்கள், மோதிரங்கள், கால்களில் அணியப்பெறும் காப்பு போன்ற தண்டை, உள்ளே பரல்களை உடைய சிலம்பு, பொற்கொலுசு, கால் விரலில் அணியும் சல்லா எனப்படும் மெட்டி முதலிய நகைகள் தஞ்சை மாவட்டம் குறிப்பாக அதிராம் பட்டினத்தில் இன்றும் புழக்கத்திலிருக்கின்றன. மேலும் மற்ற சிந்து நூல்களைக் காட்டிலும் விளக்கமாக அணிகளைப் பற்றிக் கூறியுள்ள சிந்து நூல் இது என்றும் நாம் கொள்ளலாம்.

கோட்டை - கொத்தளங்கள், மாளிகை - கோபுரங்கள், பள்ளிகள், சத்திரங்கள், குளங்கள் நிறைந்த சோலைகள் முதலியன நிறைந்து, எங்கும் தோரணக் கொடிகள் வீச, முரசங்கள் முழங்கச் செல்வச் செழிப்புடன் திகழும் அதிவீர ராமன் பட்டினத்தை ஆசிரியர் உரைக்கும் பாங்கு அவ்வூரின் பெருமையையும், பிறந்த ஊரின்பால் ஆசிரியர் கொண்ட பற்றினையும் எடுத்துக் காட்டுகின்றது.

இல்லத்திலிருந்து புறப்பட்டு 'ஊர் மானேஜர் கா. நெ. முகம்மது ராவுத்தர்' வீட்டிற்குச் சென்று தாம்பூலம் பெற்றுக் கொள்வதும், நாகை தர்காவில் முகம்மது ராவுத்

தருக்குச் சுகம் அளிக்க வேண்டிக் கொள்வதும் ஆசிரியர் அவர்பால் வைத்திருந்த பிணைப்பினைப் பறை சாற்றுவதுடன், பெரியவர்களைச் சந்திப்பதும், அவர்கள் பங்கில் துஆ செய்வதுமான பண்பாடு நிறைந்த பழக்க வழக்கங்கள் நடப்பில் நிறைந்திருந்தமைக்குச் சான்றாகவும் அமைகின்றன. அதே போன்று வெளியூர் செல்பவர்கள் உள்ளூரில் அடங்கியிருக்கும் பெரியவர்களின் அடக்க ஸ்தலங்களில் பாத்திஹா ஓதிவிட்டுப் புறப்படும் வழக்கம் இருந்தமைக்கு செய்கு நசுருதீன் ஸாஹிப் தர்காவிலும், ஹாஜா ஒலி நாதர் அடக்க ஸ்தலத்திலும் பாத்திஹா ஓதும் காட்சிகள் சாட்சியம் பகர்கின்றன.

நாகையில் தெற்கு வாடைத் தெருவில் உள்ள சிறிய தந்தை இஸ்மாயில் சாஹிபு ஆலிங்கனம் செய்து வரவேற்று அமுது படைத்து மகிழ்வது தஞ்சைத் தரணியின் விருந்தோம்பல் மாண்பினை எடுத்தியம்புகிறது.

கொய்யா, மா, பலா, பேரீச்சை, விளாங்கனி, ஜம்பு, தேசஅத்தி, நெல்லி, கமாத்தி, திராட்சை, முந்திரி, துரியான், ஆப்பிள், செவ்வாழை, மொந்தை, ரஸ்தாளி போன்ற வாழைப்பழங்கள், மாதுளை, இலந்தை முதலிய பல்வேறிடங்களில் விளையக் கூடிய கனி வர்க்கங்களை நாகையில் கண்டு ஆசிரியர் மகிழ்கிறார். சீனா, வங்காளம், மளையாளம், டில்லி, பம்பாய், மைசூர், சென்னை முதலிய பல்வேறிடங்களிலிருந்தும் மக்கள் வருகை தருவதனையும் ஆசிரியர் சுட்டுகிறார். உலகின் பல்வேறு பாகங்களிலிருந்து, பல்வேறு சமயத்தினரும் கூடும் நாகையில் பல்வேறிடங்களில் விளையும் கனிகள் கனிந்து கிடப்பதையும், மக்கள் மனதில் மகிழ்ச்சி தாண்டவமாடுவதையும் காணுவதில் வியப்பில்லை.

கனிகளைப்போன்று, மயில். குயில், உள்ளான், அன்னம், கோழி, கொக்கு, புறு, நாரை, காடை, கவுதாரி,

கோட்டான். கிளி, மைனா, குருவி முதலிய பல்வேறு பறவைகளும் சுட்டப் பெற்றுள்ளன. சந்தனம், குங்குமம், கஸ்தூரி, ஜவ்வாது, சாந்தம், புனுகு, பன்னீர், சம்பங்கி, அத்தர் முதலிய வாசனைப் பொருட்களும் குறிக்கப் பெற்றுள்ளன, விழாவில் மத்தாப்பு, தீவட்டி வாணம், கோடையிடி வாணம், தேர் வாணம். பாம்பு வாணம், நூல்சர வாணம், அவுட்டு, கப்பல், சக்கரவாணம். நீலம் வெள்ளை சிவப்பு நிறங்களாலான பொறி வாணங்கள். ஜலவானம், பூதகண வாணம், பீரங்கி வாணம், சீனாப்பெட்டி வாணம், படைப்பிரிவு வாணம், பல பட்சி வாணம் முதலிய பல்வேறு வாணங்கள் கொளுத்தப் பெற்றமை பல்வேறு வகையான வாணங்கள் இருந்தமையையும், வாண வேடிக்கைகளில் மக்களுக்கிருந்த பேரார்வத்தையும் விளக்குவனவாக உள்ளன.

அருகு விளக்குகள், அன்னம் மயில் குயில் வர்ண விளக்குகள். செடிச் சர விளக்குகள், கண்ணாடிச் சர விளக்குகள், பளிங்கு விளக்குகள், காந்த விளக்குகள், குத்து விளக்குகள், தூண்டாமணி விளக்குகள் முதலிய பல்வேறு விளக்குகள் புதிதாக வந்த மின்சார விளக்குகளோடு வியப்படைந்த வண்ணம் விளக்கப்பட்டுள்ளன.

கின்னரி, துத்தி, மத்தளம், சாரங்கி, பிடில், வீணை, தம்பூரா, பியானோ, மேளம், பம்பை, தவில், துடி, முருடு, நகரா, முரசு, தாயிரா முதலியன வாசிக்கப்பட்டமையும், முழங்கப்பட்டமையும் நாகை வளர்த்த இசைத்தமிழ் ஆய்வுக்கு வழிகோலும் வகையில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

பல்வேறு கனிகள், பறவைகள், வாசனைப் பொருள்கள், வாணங்கள். விளக்குகள், இசைக் கருவிகள் பட்டியல் போல அமைந்திருப்பினும் அவை அலுப்பை நல்காமல் மாறாகச் சுவையின்பம் பெருக்கும் விதமாகவே அமைந்திருப்பது ஆசிரியரின் கவியாற்றலை நமக்கு உணர்த்துகின்றது.

தஞ்சை மன்னன் கட்டி வைத்த பெரிய மினாரா உள்பட ஐந்து மினாராக்கள், தங்கக் கலசம், நடு மண்டபத்தில் உள்ள ரசக் கண்ணாடிகள் முதலியன பற்றிய செய்திகள்; நாகூர் ஆண்டகை உயிர் பிரிந்த பின் குளிப்பாட்டப் பெற்ற 'யாஹுசைன் பள்ளி', தொழுகை நடந்த 'பீர் மண்டபம்' அடக்கம் செய்யப்பெற்ற 'ரவ்லா ஷரீப்' ஆகியன பற்றிய செய்திகள்; வெள்ளித் தடி பிடித்து நிற்றல், ஜமாத்துல் ஆகிர் பிறை 1-ல் நடைபெறும் கொடியேற்றம், ஆண்டகையின் மறைவு நாளான பிறை 10-ல் நாகப்பட்டின வாசிகளால் கொண்டு வரப்படும் சந்தனக்கூடு பற்றிய செய்திகள் —இவை எல்லாம் ஆசிரியரின் கவிப்பார்வையில் தப்பிப் போகாத வண்ணம் அமைந்திருப்பது ஆசிரியரின் ஆழ்ந்த பார்வைக் கூர்மையை எடுத்துக் காட்டுகிறது.

"கானுறு மட்டையின் கால்கள் எனவுருள்
கககனந் தூர்தல் இஞ்சீனே—கொடுங்
கனன் மவிந்திடும் பாலையின் கொள்ளி வாய்க்
கணத்தின் மூச்சிதோ தானே"

என்ற புகைவண்டியைப்பற்றிய வரிகள் ஆசிரியரது உவமைத் திறனுக்குக் கங்கணம் கட்டுகின்றன. நாயகியை 'மேனகை ரம்பை மின்மானே', 'குலந்தீனே', 'நற்பூங்கொடி', 'வெற்புக்கிணை கற்புத்தனம்', 'சோலைக் கரும்பே', 'வனக் கிளியே', 'வேலை நிகர் விழி மாதே', 'பசுந்தோகையே' என்பன எல்லாம் ஆசிரியரது உவமையாற்றலையும், கவித் திறனையும் கவினுறக் காட்டுகின்றன. "வான்மதி நிழலாற் சேவல் மற்றொன்றினை மருவினப் பெடை நீங்க" எனும் வரிகள் சங்க இலக்கிய வழி வந்த ஆசிரியரது கற்பனைத் திறத்தை வெளிச்சமிட்டுக் காட்டுகின்றன.

படிக்கப் பெறுவதைக் காட்டிலும், பாடப்பெறும் பாடல்களாதலால் நாட்டுப்புறப் பாடல்களில் குறிப்பாகச் சிந்துப் பாடல்களில் அவ்வக்காலத்து வழக்கில் இருக்கும்

வேற்றுமொழிச் சொற்கள் வந்துவிழுவது இயல்பேயாகும். அதற்கு இந்நூலும் விதிவிலக்கன்று. மைடியர், கிளிட்டு, பஸ்டு கிளாஸ், பாக்டரி, ஸ்டேஷன், மாஸ்டர், போலீஸ், ஜங்ஷன், ஷாப், லேடி, ஓபன் கேரேஜ் போன்ற ஆங்கில மற்றும் பிரெஞ்சுப் சொற்களும், அதிக அளவில் சமஸ்கிருதச் சொற்களும், இஸ்லாமிய இலக்கியம் என்பதால் இயல் பாகவே வரும் அரபுச் சொற்களும், மற்றும் வட்டார வழக்குச் சொற்களும் இயற்கையோடுஇணைந்த ஆசிரியரின் உணர்ச்சி வெளிப்பாடாகவே நூலுள் இடம்பெற்றுள்ளன.

பல்வேறு சிறப்புக்களையும் தாங்கிவரும் இச் சிந்து நூலின் பின்னிணைப்பால் ஆசிரியர் தமது தந்தையின் மறைவின்போது பாடிய சரம கவிகள் இடம் பெற்றுள்ளன. அவலச்சுவை மிகுந்த அப் பாடல்கள் நெஞ்சைக் கனமாக்கிக் கண்களைக் குளமாக்குகின்றன. அப் பாட்ல்கள் பிறருடைய சரம கவிகளோடு ஒப்பு நோக்கி ஆய்வதற்குரியன.

சுருங்கக் கூறின் 'நாகூர்ப் புகைரத வழிச் சிங்கார வொயிற் சிந்து' என்றும் நின்று நிலவும் எளிய, இனிய நல்ல தொரு படைப்பாகும்; அதனைப் படித்துப் பாதுகாத்துப் பரப்பவேண்டுவது நமது கடமையாகும்.

17, கச்சேரி சந்து
மைலாப்பூர்
சென்னை.600 004
4-9-1985

அன்பு
சேமுமு. முகமதலி

## ஆசிரியர் குறிப்பு

| | | |
|---|---|---|
| ஆசிரியர் பெயர் | : | கா, செய்யது முஹம்மது அண்ணாவியார். |
| தந்தையார் பெயர் | : | நவரத்தின கவி காதிர் முஹிய் யித்தீன் அண்ணாவியார். |
| தோற்றம் | : | 1857 (நள வருடம் கார்த்திகை மாதம் 12ஆம் நாள்) |
| மறைவு | : | 1931 (பவ வருடம் ஆடி மாதம் 17ஆம் நாள்.) |
| ஊர் | : | அதிராம்பட்டினம். |
| இயற்றிய நூல்கள் | : | சீட்டுக் கவிதை, சரம கவிதை, நாகூர்ப் புகைரத வழிச் சிங்கார ஒய்ற்சிந்து, நபியுல்லாஹ் பேரில் கீர்த்தனங்கள். |

முன்னோர் சிறப்பு : அண்ணாவியார் குல மூலவர், அமிர்த மதுரகவி செய்யிது முகமது அண்ணாவியார், அலி நாமா, நூறு நாமா, சுப்பிரமணியர் பிரசன்னப் பதிகம் அசுவமக அந்தாதி முதலிய பத்து நூல்களை இயற்றினார். அவர் தம் மூத்த மகன் சையது மீரா லப்பை ஜீவரத்தின கவி ராயர் என்னும் சிறப்புப் பெயர் பெற்றவர். மதீனம் கலம் பகம், மகுடி நாடகம், மனையலங்காரம் முதலியவற்றின் ஆசிரியர். இளைய மகன் நூர் முஹம்மது அண்ணாவியார். அவர் தம் மகன் நவரத்தின கவி காதிறு முஹிய்யித்தின் அண்ணாவியார். பிக்ஹு மாலையின் ஆசிரியர். மதுர கவியின் மகள் வயிற்றுப் பேரன் சொர்ண கவி நயினா

முஹம்மது பாவாப் புலவர் மழைப் பாட்டின் ஆசிரியர். காதிறு முஹிய்யித்தீன் அண்ணாவியாரின் மகன் செய்யிது முஹம்மது அண்ணாவியார் இப் புகைரத வழிச் சிந்தின் ஆசிரியர்.

பதிப்பாசிரியர் : நவரத்தினகவி காதிர் முஹிய்யித்தீன் அண்ணாவியாரின் மற்றொரு மகன் ஹபீபு முஹம்மது அண்ணாவியார். அவர்தம் மூத்த மகனாரே இந் நூலின் பதிப்பாசிரியர் முதுபெருந்தகை கே. எஸ். சையிது முஹம்மது அண்ணாவியார் ஆவர்.

ஒரு குலத்தில் தோன்றிய திருமணிகள் அனைவருமே அரும்புலவராய் இருந்தனர் என்பது பெருவியப்புக்கு உரிய தாகும்.

## சாற்று கவிகள்

**அதிவீரராமன் பட்டினம்**
**ம-ா-ா-ஸ்ரீ லெ. மு. முகிய்யித்தீன் பகீர்**
**அவர்களால் இயற்றப்பெற்றது**

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

இனம்பெருகும் படைப்(பு)எவைக்குங் கருவானார்
குலமணியாய் இலங்கு தாய
மனம்பெருகும் ஒலிகள்பிரான் அமர்நாகைப்
பதியேகி வருமோர் சிந்தாய்க்
கனம்பெருகு பெரும்புலமைப் பரம்பரையிற்
பெயர்தாங்கிக் கல்வி ஆய்ந்த
தனம்பெருகு செல்விநகர் செய்யிது
முகம்மதென்பார் சாற்றன் மாதோ

**ஷையூர் வந்திருக்கும் இராமநாதபுரம் சமஸ்தான வித்வான்**
**சர்க்கரைப் புலவர் அவர்களின் தௌகித்திரர்**
**ம-ா-ா-ஸ்ரீ முத்தண்ணா பிள்ளை**
**அவர்களால் இயற்றப்பெற்றது**

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

செந்தமிழில் வழிநடையாஞ் சிந்தெனவோர்
பூமாலை திரட்டி வாயால்
தந்தவலான் அவனெவனென் உசாத்துணைவன்
நல்லன்பன் தன்மைக் கேற்பப்

பந்தமுளான் செய்துமுகம் மதுவெனும்பே
ராகியருள் பன்னும் வாக்கிற்
சந்தமுளான் செல்லிநகர் சொந்தமுளான்
யாவர்மெச்சுந் தகைமை யோனே.

**மதுரை ஜில்லா இளையான்குடி ஆயுள்வேதப் பண்டிதரும்**
**வித்துவத் தன்மையருமாகிய பண்டிதம் காதிறு பாவா குமாரர்**
**ம-ள-ள-ஸ்ரீ பண்டிதம் முகம்மது அபூபக்கர்**
**அவர்களால் இயற்றப்பெற்றது**

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

தேவர்களுந் துஞ்சாத அமிர்தகவி
செய்தவத்திற் சேய னான
ஜீவனுக்கெ லாம்ஜீவ ரத்னகவி
வழிவந்து ஜெகத்தி னுற்று
மேவுரத்ன மதைச்சாணை யிட்டநவ
ரத்னகவி மேவி யீன்ற
நாவலன்கீழ் நாகமுறச் செய்நாக
ரத்னகவி நனிவல் லோனே,

பூதலமெ லாம்புகழும் ஹமீதொலிசந்
நிதிகாணப் புகழ்ந்து பேசிக்
காதலனுங் காரிகையும் ரெயிலேறிப்
பலசிறப்புங் காட்டி வந்த
தீதகலும் வழிச்சிந்தை யெடுத்துரைத்தான்
செல்லிநகர் சீர்பெற் றோங்கு
மாதவன்செய் யிதுமுகம்ம துரைதெரிந்த
வானவரு மகிழ்கொள் வாரே.

எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

அன்னரெயில் வழிப்பெருமை முந்நூற் கண்டும்
அதிவீர கம்பன்வில்லிப் புத்தூராழ்வான்
நன்னிலத்திற் சிந்துசொலிற் குற்றங் கூறி
நகைப்பருல கவரென்று நாண முற்றுச்
சன்னமதாய் நைடதமும் ராமா யணம்
தனபார தம்புகன்றார் ஹமீது நாதர்
சென்னைரெயிற் சிறப்பதனைக் கவிச்சிங் காரம்
செய்யிது முகம்மதறிந் தளித்தன் மாதோ.

## ஷையாரவர்கள் பின்னோர்
## ப. கா. பண்டிதம் செய்யிதப்துல்காதிறு
## இயற்றியவை

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

பாதலமா தியவுலகு பதினான்குட்
பல்லுயிரும் பணிந்து போற்றப்
பேதகமி லாதரசு புரியிறைவன்
மறைவிளக்கும் பெட்பு வாய்ந்த
நாதர்மஹ்மூதுநபி பேரர்ஹ
மீதொலிமீது நடைச்சிந் தாகக்
காதலொடு சேர்த்துரைத்தார் பூதலத்திற்
புலவருளங் களிக்கத் தானே

கண்டாலோ விழிமணக்குந் தொட்டாலோ
கரம்மணக்குங் கருதி யோர்பா
விண்டாலோ நாமணக்கும் அதன்பொருளைத்
தெளிவாக விளங்கித் தேர்ந்து
கொண்டாலோ மனம்மணக்கும் மற்றொருவர்
அருகிருந்து கூற முற்றும்
உண்டாலோ செவிமணக்கும் என்றாலிந்
நூற்பெருமை உரைத்தற் பாற்றோ.

இத்தகைய நூற்புலவர் யாவரெனில்
இங்ஙனெடுத் தியம்பக் கேண்மோ
முத்தமிழு ணர்ந்துநவ ரத்னகவி
பெற்றவருள் முதிருந் தோன்றல்
எத்தலமும் புகழ்படைத்த செல்லிநகர்க்
காசிரிய ரெனப்பா லர்க்கு
வித்தையறி வித்தருளுஞ் செய்யிது
முகம்மதெனு மிகவல் லாரே.

நேரிசை வெண்பா

தாரார் வளர்நாகை ஷாஹுல்ஹமீ தண்ணல்மேற்
பேரார் நடைச்சிந்து பேசினார்—சீராருஞ்
செல்லிநகர் ஓங்குகவி செய்யித் முகம்மதெனும்
வல்லபுகழ் சேர்நா வலர்.

**அதிவீரராமன் பட்டினம் கவிச்சிங்காரம்**
**ம-ா-ா-ஸ்ரீ அ. ரு. கந்தசாமி**
**உபாத்தியாயர் இயற்றியவை**

அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

தவத்திலுயர் கருணைமழை பொழியுமொலி
மார்கள்தமிற் றலைமை வாய்ந்து
பவத்தொழிலை யகற்றவரும் ஷாஹுல்ஹமீ
தெம்பெருமான் பதியாம் நாகை
நவத்திலமை ரெயிற்பாதை நடத்திவருஞ்
சிந்ததனை நவிற்றி னாரால்
சுவத்திலகும் அண்ணாவி செய்யிதுமு
கம்மதெனுஞ் சுகுணர் மாதோ.

நேரிசை வெண்பா

நவரத்தி னக்கவிஞர் நற்குலமந் தோங்கும்
தவரத்ன மாகவந்த தக்கோர்—புவனத்திற்
செய்யதிரு நாகைவழிச் சிந்தினியந் தாய்விளம்பும்
செய்யித் முகம்மதெனுஞ் சேய்.

## நாகூர்ப் புகை ரத வழிச் சிங்கார வொயிற்சிந்து

### காப்பு

நேரிசைப் பின் முடுகு வெண்பா

சீரார் திருநாகைச் செய்யிதுஹ மீதொலிமேற்
பேரார் ரெயில்சிந்து பேசுதற்கு — நேராரும்
உத்தமப்ப டைப்பனைத்து முற்றமைத்த ளித்தழிக்கும்
கத்தனைத்து தித்தனித்தங் காப்பு.

### கலித்துறை

சீரிலங் குந்திரு நாகையி லோங்கித் தினமகிமைப்
பேரிலங் கும்புகழ் ஷாஹுல் ஹமீதொலி பேரருள்சேர்
நேரிலங் குந்தகை சந்நிதி கண்டுநாம் நேர்ந்துவர
மேரிலங் குங்கொங்கை மாதே பணியணி மேனகையே.

புகைரத வழிச் சிந்து

பின் சந்தக் குழிப்பு

### பல்லவி

மேனகை ரம்பைமின் மானே—நாகை
மாநகர் பார்ப்போம் வா தேனே

## அநுபல்லவி

மோன சுகானந்தம் முத்தி யருள்வேதர்
முஸ்தபா வாம ஹு மூதிரசூல்பேரர்
தீனமர் ஷாஹுல் ஹமீதொலி நாதர்

செம்பொற்பதம்
நம்பித்தினம்
இன்பத்துடன்
பின்பற்றிடு. —மேனகை

மல்லிகை முல்லை இருவாட்சி சண்பகம்
வாரிசம் ரோஜாப் பூச்சூட்டி — தங்க
மாணிக்கம் முத்துப் பதித்த சுட்டிநெற்றி
வட்டம் பிறைமயிர் மாட்டி — வள்ளை

வல்லிகை யொன்னப்புக் கொப்பலுக் கொத்துக்கும்
மத்துத் தொங்கிலினைப் பூட்டி — உந்தன்
வர்ணக்குமின் மூக்கில் தத்து பிலாக்குமீன்
வரிக்கண் ணஞ்சனந் தீட்டி — உயர்

கல்லிழைத்த வச்ர டீக்காப் பதக்கமும்
கண்டிகை நித்திலஞ் சொர்ணப் பூமாலையும்
வெல்லும் பணிலக் கழுத்திடு தாலியும்

வெற்புக்கிணை
கற்புத்தனம்
பொற்கச்சணி
நற்பூங்கொடி —மேனகை

கங்கணம் யாழ்க்கைக்குக் கடையம் பெற்றொடி
கை விரல்ஆழி யுந்தொடுத்து — மின்னற்
கர்னக் கொடியிடை துலங்கும் பொற்சரி
கைவர்ணப் பட்டினை யுடுத்து — லங்கை

சிங்கள வேலைப் பாதசரந் தண்டை
சிலம்பு பொற்கொலுசை யெடுத்து — அணி
சினைவராலின் கால் விரலிற் பீலியுஞ்
சேலும் முன்தாங்கினை யடுத்து — எத்தன்

வங்கணம் நங்கை நம்சிங்கார மாடிமேல்
வந்து சோபாவி லிருந்து வமுதுண்டு
தங்கமே தேசோ மயானந்தமுங் கண்டு

தரிசித்துநாம்
பரிசுத்தமாய்
பிரிசத்துடன்
வரவொத்திரு —மேனகை

ஆரணி யங்கமழ் தோரண வீதி
அலங்காரக் கொத்தளங் கோட்டை — சிங்
காசன மாளிகை கோபுர மும்பள்ளி
யன்ன சத்திரங்கள் பாட்டை — நளன்

காரணிக்க முள்ள நைடதஞ் சொன்ன
காவலன் ஸிற்பனன் ஸிரேட்டை — ஆள்கைக்
காரன்அதிவீர ராமன் பதிநகர் கண்டோதி
வாபாங்கி வீட்டை — சதுர்த்

தோரணக் கொடிகள் நிறைந்த தெருக்கள்
சீரியர் செய்யிது செய் குமார் குருக்கள்
நேரணி குளங்கள் அடர்ந்த தருக்கள்

நீனே குலந்
தீனே கலந்
தேனே சகி
மானே நட —மேனகை.

நித்திலம் நிறைத்த மாடம்நிரை திரை
நேர்குஞ்சரம் நாவாயீடு—ஓசை
நீள்பவளக்கொடி கைத்தொடிமகளிர்
நிதமுங் கடிமுர் சோடு—இணை

வைத்திடிற் கடலை நிகர்க்கு மிந்நகர்
வண்ணம் வளம் செல்வ நாடு—ஊர்
மானேஜர் கா. நெ. முகம்மது
ராவுத்தர் மேன்மாடி வீடு—கண்டு

வஸ்திரந் தாம்பூலம் பெற்றனம் பள்ளியின்
வணங்கென் மூதாதை யமிர்த கவிதன்
கத்தமு மோதினோம் சித்திரக் கோரிமுன்

களபஸ்தனம்
புளகந்திருச்
செழியன்குளம்
வளம்பாரடி —மேனகை.

வண்டு மலர்செறி முண்டக மீதன்னம்
மகிழ்ச்சி யாணுடன் தூங்க—ஒளிர்
வான்மதி நீழலாற் சேவல் மற்றொன்றினை
மருவினப்பெடை நீங்க—இன்னம்

செண்டு தே ரூர்சுனை நீர்வரம் பெய்துநம்
செல்விமா நகர மோங்க—ஒளிர்
செய்கு நசுருத்தீன் ஸாஹிபைத் துதித்துச்
செய்முறை நாருசா வாங்க—இதைக்

கண்டு புகழ்கடற் கரையுங் கண்டனம்
ஹாஜா ஒலிநாதர் கபுறின் சந்தனம்
விண்டு மகிழ் பாத்தி ஹா ஓதி வந்தனம்

விற்கட்டுமுன்
இக்கட்டுறா
டிக்கெட்டெடு
பொற்கட்டியே —மேனகை.

கானுறு மட்டையின் கால்கள் எனவுருள்
ககனந்தூர்தல்இஞ் சீனே—கொடுங்
கனன்மலிந்திடும் பாலையின் கொள்ளிவாய்க்
கணத்தின் மூச்சிதோ தானே—கோடை

வானிடிச் சத்தம்போல் குமுறுதலைக் கண்டு
மயங்காதே மைடியர் மானே—சித்ர
வர்ணக் கிளிட்டிட்ட தங்கமயம் ரெயில்
வண்டியில் ஏறடி தேனே—வான்

பானொளி மேனியே பண்டி பாஸாச்சுது
பஸ்டுக் கிளாஸான வண்டியும் வாய்த்தது
மானே செல்லிநகர் ஸ்டேஷன் கழித்தது

மயிர் சூடிய
மலர் வாடுமுன்
ஒயில் நாகையில்
ரெயில் ஏகிடும் —மேனகை.

பஞ்சவர் ணக்கிளி கொஞ்சு மனோபவி
பாக்டெரி யென்று நீ தேறு—தம்பி
பாக்கியவான் கோட்டை ஸ்டேஷன் கடந்து
பறக்குது பிரப்பன் ஆறு—மாடு
செஞ்சுடர் மேவிய முத்துநகர் ஸ்டேஷன்
தெரித லின்புகழ்கூறு—நம்மள்
செய்கு தாவூதொலி யாண்டகை பாதத்தைத்
தெரிசித்து வண்டி யேறு—பெண்ணே

அஞ்சிடாதே கோரை யாறு கடந்தோமே
அச்சுதன் தில்லை விளாகத்தின் விந்தமே
பஞ்சமுறாப் பாண்டி ஸ்டேஷனும் வந்தோமே

பாலும் அமு
தாலும் புசி
சேலுங் கணை
வேலும் விழி —மேனகை.

செந்திரு மயிலே நெடும்பலங் குன்னூர்
திருத்தருப் பூண்டித் தேசம்—இதில்
ஸிவில் ஜட்ஜி போலீஸ் மாஸ்டர் தாலுக்கா
தீர்ப்புக் கச்சேரி விசேஷம்—பெண்ணே

இந்த ஸ்டேஷன் விட்டுப் பொன்னிரை ஸ்டேஷன்
இலங்குது பூச்செடி வாசம்—இன்னம்
இரண்டு நிமிஷந் திருநெல்லிக் காவல்
இருக்குது ஸ்டேஷனுல் லாசம்—இதோ

வந்தோந்திரு நாட்டி யத்தான் குடிஸ்டேஷன்
மானே திருவாரூர் நெற்குத்திடு மிஷன்
எந்த ஸ்டேஷன்களும் ஒவ்வாதிது ஜங்ஷன்
இனமே மயில்
அனமே இதன்
ஜனமே சொலக்
கனமா மடி —மேனகை.

மாங்குயி லேபார் வடதிசைக் கோபுரம்
மந்த்ர கிரியோ சமானம்—எங்கும்
மண்டபம் ஆயிரக்கால் விட்டிலங்கிய
வடிவஞ் சித்ர விமானம்—நாரி

பாங்கன் நடனந் தியாகராஜன் கோயிற்
பார்க்க இந்துக்கள் நிதானம்—வாசப்
பங்கயக் கொங்கை சுமக்கப் படாதிடைப்
பலத்துக் கிட்ட வொட்டி யாணம்—மின்னற்

பூங்கொடி மாதர் புருடர்சிறார் சத்தம்
போடுகிறா ரோடி யேறுகிறார் நித்தம்
நீங்காநாகை ரெயி லேறிக் கொடுமுத்தம்
நிதமுந் துதி
மதனின் ரதி
வதனந் திகழ்
பதமென்னடை —மேனகை.

கீர்த்தி விஜயபுரம் விட்டுஅடி யக்க
மங்கலங் கேளடி நேராய்—கூத்தூர்
கீவ ளூர் சிக்கலும் நாகபட்ண ஸ்டேஷன்
கேகயமே யெட்டிப் பாராய்—ஆலை

சீர்த்திக் கூடுமாபீஸின் மின்சாரந்
தீபம்சந்திரன் என வோராய்—பீச்சின்
ஸ்டேஷன் பிட்ணிமணி கொழிக்குஞ் சாகரந்
திரள்அலைச் சத்தம்ஆராய்—வெகு

நேர்த்தியதாய் ருஷி இங்கிலீசும் பிரஞ்சு
நீராவிப் போர்க்கப்பலோ ராயிர மிஞ்சி
பார்த்தால் வெடிகுண்டுப் பீரங்கித் தொனிக்கஞ்சி

பதறிப் படை
கதறித் திசை
விதறித்ததி
சிதறிட்டன —மேனகை.

மாகமட் டுயர்ந்த மாளிகையும் மெத்தை
மாடங்கள் சோட சிங்காரம்—பார்த்து
வரலாம் ரெயில் விட்டிறங்கி யுன்பாங்கி
மாருடன் நட வொய்யாரம்—செழும்

பூகமிலாங் கலிவாழை யரவிந்தம்
பூதரம் போன்ற மந்தாரம்—வர்ண
பூப்பந்தற் சோடினைச் சொல்லி முடியுமோ
பூங்கிளியே யலங்காரம்—முலைக்

காகும் ரவுக்கை ரத்னமுத்து மாலையும்
ஆபரணாதி முகப்பணிச் சேலையும்
நாகபட்ண சாப்புப் பண்டக சாலையும்

நகர் மங்கையர்
புகர் மின்னொளி
நிகரோ! ரதி
பகர்வாயடி —மேனகை.

வஞ்சியரே பசிக்குண வாதிமுத்து
வாசச்சம் பாவரி செடுத்து—நெய்
வார்த்துப் புலாவுடன் பிரியாணி சோறு
வைத்திடு நொடியிற் சமைத்து—மணம்

மிஞ்சும் பலவகைக் கறிகள் பொறித்து
மேசையின்மேல் வைத்துப் பரத்து—உண்டு
வேடிக்கைக்கொ டியூர்கோலம் வருவதால்
விரும்பித் தாம்பூலந் தரித்து—அன்னங்

கொஞ்சுங் குயின்மயில் கேகயமேயுந்தன்
கூடவே பாங்கிமார் பரிலருடன் மைந்தன்
அஞ்சிடா தேஜனச் சந்தடியில் எந்தன்

அருகாகவே
வருவாயொலி
தருஹாக்கொடி
வருமுன்னமே —மேனகை.

கோட்டுச் சிமிழ்க்கிண்ண மாமுலை மாதே
கொடியலங் காரத்தின் வருக்கம்—வெகு
கூட்டத்து டன்செட்டிப் பல்லக்கு வேடிக்கை
குஞ்சரத் திரளின் நெருக்கம்—புகை
போட்டுகளுங் கப்பற்சீனக் கண்ணாடிப்
பொழுதை யளக்குறார் சுருக்கம்—ரத்ன

ஷேட்டுத் தெருவெங்குங் கோலியும் நாகூரு
செல்வழியை நோக்கிப் போவதையும் பாரு
சூட்டுமலர்க் கூந்த லாளே ரெயிலேறு

தொடுக்கும் ரெயில்
கொடுக்கும் புனல்
முடுக்கும் விசை
யெடுத்தோடுது. —மேனகை.

பக்கம் இருபுறம் பூங்காவனம்—பசுங்
கிள்ளைகள் கொஞ்சிடும் சாரம்—வெளிப்
பாளையஸ்டேஷன் நாட்டுக் கோட்டைச் செட்டிப்
பணவட்டிக் கோய்வில்லை நேரம்—லண்டன்

தங்கதுரைமார் பங்களா சதுர்மின்
சப்கோடு பேங்கலங் காரம்—இந்த:
ஸ்தலங்கா டம்பாடி ஸ்டேஷன் கடந்திதோ
ஸாஹீபு ஸில்லாடி யோரம்—வெயில்

மிக்க கடினம்பார் வேகம் புகைரதம்
மேலும் நாகை ஸ்டேஷன் தோற்று தொருவிதம்
இக்கணம் ரெயில் விட்டிறங்கியற் புதம்

எயில் செய்கன
வொயில் வண்டியில்
குயிலேஇள
மயிலேறிடு —மேனகை

கூடமும் மேடை சிம்மாசனம் மாளிகை
கோபுரமுஞ் சித்ர வேலை—அரண்
கொத்தளங் கோட்டை பலரதங் குஞ்சரம்
கொலுமுகப்பும் பூஞ்சோலை—ஒளிர்

மாடமலங் கிர்தச் சாளரங்கள் மோடி
மாடியும் நடனச் சாலை—சேல்
வாளைவிரால் வெடித்தெழும் படித்துறை
வாவி கொழிக்கும் முத்தாலை—அலை

கோடும் பவளத்தால் மாணிக்கப் பொற்சட்டம்
கோக்கும் பூச்சரங்கள் டாங்காச்செடித் திட்டம்
பாடுங் குயிலேபூப் பந்தல் வாட்ட சாட்டம்

பறக்கும் பூலா
நிறக்குங் கொடி
துறக்கும் வரை
சிறக்குந் தெரு —மேனகை.

சந்தனங் குங்குமம் அம்பர் கஸ்தூரி
சவாது பரிமள வாசம்—வில்லை
சாந்தங் களபம் புனுகு பனிநீர்
சம்பங்கி அத்தரும் நேசம்—சதுர்க்

கந்தமலரும் தகரந்த வர்க்கமுங்
கண்ணாடி பீரோ விசேஷம்—வான்
கதிர்ஒளிமணி ரத்னாதிகள் விற்குங்
கடையணிகள் உல்லாசம்—சீமை

சித்தடிக் கீன்காப் பாவாடையும் டோரியாச்
சேலையில் லூரி பொற்சரிகைச் சாரியா
இந்தாலோ விற்குது பட்டுக்கண் மேரியா

இன்னம் பல
வண்ணங்கலை
அன்னங்கிளி
மின்னேயெடு —மேனகை.

வாசங் கமழ்அர விந்தங்கள் பூந்திரு
மாதே கனிவளங் கொய்யா—தோடா
மாங்கனி சர்க்கரை நாரத்தை பேரீந்து
வருக்கை விளாங்கனி பொய்யா—சீனாத்

தேசஅத்தி ஜம்பு நெல்லிகமாத்தி
திராட்சைக் கொடி முந்திரி துரியா—ஆப்பில்
செவ்வாழை மொந்தன் ரஸ்தாளி யெலுமிச்சை
தேங்கரும் (பு) இனங்கள் மெய்யா—பே

ராசை மிகுந்திடும் மாதளை இலந்தை
அன்ன ராசி பலவர்க்கங் கனிச்சிந்தை
பாசமகலா ஸர்பத்து ஹல்வா விந்தை

பான்ரொட்டிகள்
தேன் லட்டொடு
மேன் காப்பியுங்
தீன் சாப்பிடு —மேனகை.

சிட்டுக் குயில் மயில் சட்டித் தலையுள்ளான்
சிறவி நங்கண வாச்சி—அன்னச்
சேவலும் பேடை மணிப் புறாக் கொக்கினஞ்
சேங்கால் நாரைக் கண்காட்சி—கோட்டான்

கட்டுங் காடை கவுதாரியு மைனா
கலிங்கங் கிள்ளையின் பேச்சு—தூக்
கணந் தாரா வாத்து பட்சி சாலங்களுங்
கஸ்தூரி மான்மணம் வீச்சு—விலை

மட்டுப்படா தொட்டை செம்மறி மான்மரை
வற்காலி சிங்கம் புலிமுயலும் நிரை
வட்டு முலைமாதே வாங்குகிறார் துரை

மாற்கட்டிரள்
ஏற்பட்டவை
யூர்க் காய்கறி
தீர்ப்பாம் விலை —மேனகை.

சோலைக் கரும்பே வனக்கிளியே பசுந்
தோகையே போம்மனப் பீடை—இனி
ஜோதிக்கு முசலங்காரங் கொத்தளம் விண்
ஜொலிக்கும் மாமணிமேடை—இனி

மாலைப் பொழுதாகும் மாநகர் விடங்கம்
வாவென் றழைத்திடுஞ் சாடை—இசு
மாயீல்ஸா ஹீபுநம் சிறியதந்தை வாழ்
வாசஸ்தலந் தெற்கு வாடை—வந்தோம்

வேலை நிகர் விழிமாதே பரிசனம்
வீடு வந்துற்றதுஞ் செய்தார்ஆ லிங்கனம்
பாலையுந் தேனமு துண்ண வைத்தார்முனம்

பசி யாறினம்
சுசி மேவிய
ருசி தாம்புலம்
புசி யன்னமே —மேனகை.

கம்ப மதகரிக் கோட்டினை வாட்டிடுங்
கலசமென் முலை மயிலே — அப்துல்
காதீ ரவ்லியாவின் மக்கா மினையே சதா
காலந் தரிசித்தோம் பயிலே — வந்து

பம்பர பொற்பிறை யொன்பதிற் பீர்வைக்கும்
பாச வுல்லாசம் பார் குயிலே — வாசப்
பாக்கு ஏலங்கூட்டுக் காசிக்கட்டிப் பாளிதம்
பச்சைக் கிராம்பினம் ஒயிலே — இதை

நம்புமீ ரொட்டுக்கடை விற்கும் நங்கையர்
ரதிவின் மகளை விலைகொள் மங்கையர்
அம்புவி மாதே விகசிதக் கொங்கையர்

அணிமானிடம்
பணிவற்கமும்
துணிவிற்கொளும்
மணிபொற்கலம் —மேனகை.

மின்னொளி வளையல் சீப்புகள் அஞ்சனம்
வெண்சரம் ஐந்தறைப் பெட்டி—நாடா
மிக்குப் பலமணம் பட்டுக் கயிற்குஞ்சம்
விற்கும் பொற்சரிகைப் பட்டி—சாப்பில்

மன்னி இலங்கிடும் கண்ணாடி பீரோக்கள்
மணிக்கெடி யாரங் கெட்டி—துரை
மார்கள் லேடியுடன் ஒபன் கேரேஜினில்
மணிலா மட்டங்கள் கட்டி—வரும்

என்ன விநோதம் பைஸ்க்கோல்ட்ராமா சர்க்கஸும்
இந்த்ர சபாநடனம் காவற் போலீசும்
இன்னம் வெகுபல வேடிக்கையும் பிரேசும்

இனமும் பல
ஜனமும் வரும்
முனமே மயில்
அனமே நட —மேனகை.

சங்கீதங் கின்னரி துத்தி மத்தளங்கள்
சாரந்தா பிட்டில்க ளோசை—வீணைத்
தம்பூரா பியானா பாடி விலைமகள்
சதுராடல் பல பாஷை—இரு

கொங்கை குலுங்க நடனங்கண் டாடவர்
கொண்ட மயக்கம்பே ராசை—இளங்
கூவுங் குயிலினம் பார்சற் குருப்பீறின்
கொலுச் சிங்காசன மேசை—தவம்

இங்கிர்த மான ஹிலுறுநபி பேட்டி
இந்த விடத் தந்தக் கூவல்நீரா லாட்டி
சங்கை காதீறவ்லி யாவைக் கபன் சூட்டித்

தழுவியவர்
தொழுவித்திடும்
செழுமாமணி
முழுமண்டபம் —மேனகை.

தோத்திரஞ் செய்யடி பார்த்திபர் நாகைவாழ்
சுல்தானுல் ஆரிபீன் கோனே—கந்
தூரி முழக்கம் ஜமாத் துல்லா கிர்மதி
தோன்றுநாட் பத்தின்று தானே—பார்க்க

நேர்த்திய தாயுந்தன் பாங்கிமார் சூழ
நெருங்கி நடந்துவா மானே—தஞ்சை
நீதம் வளர்சர போஜி மஹாராஜன்
நீள்மன ராக்கொடி வானே—சென்று

காத்திர முள்ள சமுத்திரத்திற் றோய்ந்து
காசினியிற் புனல் வீசுவதை யோர்ந்து
சூஸ்திர வானந்த விஞ்சையை யாய்ந்து

சுருக்கம்புகல்
அருக்கன் நில
வெறிக்குங் குழு
சிருச்குஞ் சுடர் —மேகைன.

கைல(ய)ங்கிரி தானோ ஐந்து மனோராக்
கலசம்பொன் பொற்பிர காசம்—தர்ம
கர்த்தா மானேஜர் கொலுச் சிங்கார மேடைக்
கச்சேரிக் காட்சியுல் லாசம்—மஹா

சைலமாம் பள்ளி யலங்கஞ் சிகரத்தைத்
தாண்டல் கதிர்ப்பிர யாசம்—ஒளிர்
சம்பவளங் கம்பம் பளிங்கு மண்டபஞ்
சாந்து நித்திலம்வி சேஷம்—கிளி

மயிலுங் குயிலன்னம் மாடப்புறா மேயும்
மாணிக்கம் முத்தெலாம் முன்றில் ஒளிபாயும்
அயிலங் கதிர்மணிச் சுவரும் வான்தோயும்

அடிசிற்கினி
யமுதேபெடை
நடையொத்தினி
வருவாயடி —மேனகை.

வால சூரியப் பிரகாசம் பொன்மலையில்
வைத்திடு மாணிக்கக் குடமோ—தங்க
வர்ணச்சரம் நெட்டிபூச் செடியம் மானை
வான் சிகரந்தொடு மிடமோ—இந்திர

ஜாலந் தானோ தோட்டங் கண்ணாடி வேலையுந்
தசும்பின் சித்திரப் படமோ—பூர்ணச்
சந்தி ரோதயம் போலச் சந்தனக் கூடிதோ
சாரி நாகப் பட்ணத் தடமோ—வருங்

கோலமும் மத்தாப்புத் தீவெட்டி வெடிவாணம்
கோடை யிடிமிடா வாணமுந் தேர்வாணம்
நீலமும் வெள்ளைச் சிவப்புப் பொறிவாணம்

நிலவுங்கதிர்
உலவும்உடுக்
குலமுஞ்செறி
ஜலவாணமும் —மேனகை,

பேதனம்பூத கணம்வாணம் ஆகாயம்
பீரங்கி வாணங்கள் கோடி—சீனாப்
பெட்டிவாணம் பலபட்சி வாணம்
படைப்பிரிவின் வாணங்கள் ஜோடி—இது

நூதனம் அவட்டுக் கப்பற் சக்ரவாணம்
நூற்சர வாணங்கள் மோடி—கிடாய்
நோக்கஞ் சண்டை பாம்பு வாணம் புகைக்கூடும்
நோடாலம் பாரடி யோடி—மேளம்

சாதனம் பம்பை தவில்துடி முருடு
தம்பூர் நகரா நவ்பத்து முரசொடு
ஆதன வீதி நாகூரைச் சுற்றிக் கூடு

அலங்காரவா
சலின்கண்ணிறுத்
திலங்குதினிக்
கலங்காதடி —மேனகை.

ஆணிப் பொன்னுத்திரம் போதிகை சாளரம்
ஐம்பொற் கபாடம் அனேகம்—அதில்
அற்புத வுற்பனப் பொற்சித்திர வேலையின்
அணி அலங்கிர்த மோகம்—நிலை

மாணிக்கங் கோமேதகம் முத்துபவளம்
வைடூரியம் புட்ப ராகம்—பச்சை
மரகதம் வச்சிரம் நீலம் இவைகளால்
வைத்திடுந் தூண்நிரை யோகம்—இதைப்

பாணித்திடில் ஒருபொழுதில் நிலவும்
பகலும் இருளும் காட்டிக் குலவும்
பேணிப்புடன்தரைப் பளிங்கும் பலவும்

பெட்புக்கிணை
இப்பூவினில்
செப்பும்படி
ஒப்பேதடி —மேனகை.

அண்டம்அளாவிய மண்டபம் முற்றும்
அருகு விளக்குகள் கோடி—கிளி
அன்னங் குயில்மயில் வர்ணச் செடிசரம்
ஆன விளக்குகள் கோடி—இதோ

கண்டனம் புதினம் மின்சாரம் சோடச
கலைமதி யொவ்வாக் கோடி—நிலைக்
கண்ணாடி செட்டுப் பளிங்கு விளக்குகள்
காந்த விளக்கொரு கோடி—பல

பண்டங்கதிர் குத்து விளக்குந் துலங்க
பகல்வத்தி ஜகஜோதி ஹிந்திலுங் குலுங்க
தண்டந் தூண்டாமணி விளக்கும் இலங்க,

ஜாகை இது
வாகை பெறு
ஊகை வள்ளல்
நாகை யொளி —மேனகை.

பாரிசு மக்கா மதிநா றூம் மிசுறு
பைத்துல் முக்கத்திசு வாசி—சீனா
பங்காளங் கொச்சி மலையாள மும்டில்லி
பம்பாய் மைசூர் மதராசி—என்னும்

ஊர்பல வாசிகள் வந்து ஹத்தம் மௌ
லூதுக ளோதியுங் காசி—இதோ
உண்டியல் போடுங் குடங்கள் நிறைந்தங்கு
ஒய்வில்லை பார்மக ராசி—ஒலி

வாரிசு செய்யிது செய்குமார் சடையர்
வாணருந் தாயிராக் கூட்டமும் மிடியர்
சாரிசன் வில்லை வெள்ளித் தடிக் காரியர்

சனமுந் தரி
சனமும் விமோ
சனமும் பெறத்
தினமும் வரும் —மேனகை.

வாட்டமுறாச் சனசந்தடி நாயகர்
மக்பறாவுஞ் சிங்காரம்—பார்த்த
வரிசை யாலினித் துன்பம் பிணியிடர்
வறுமையகலுந் தூரம்—நாம்

கேட்டிடும் பாக்கியம் வாழ்வு வளர்ந்தோங்கக்
கெஞ்சிவரங்கொள் இன்னேரம்—ஒராஜ
கெம்பீர யோகன் முகம்மது ராவுத்தர்க்(கு)—
இன்ப சுகங்கேள் ஒய்யாரம்—சந்திரன்

காட்டுப் புலிமா னுடும்பு பணிந்திடும்
ஹாமீம் முகம்மதர் பேரராய் வந்திடும்
நாட்டந்தரும் வள்ளல் நாகையின் வாழ்ந்திடும்
நம்பங்கினில்
அன்புற்றவர்
செம்பொற்பதம்
நம்பித் துதி —மேனகை.

காரண நாயகர் தர்ஹாமகாவித்வான்
கற்றோர் துதிக்கும் உஸ்தாது—குலாம்
காதிறு நாவலர் தரிசனத் தில்நம்
கவியரங் கேற்று மாது—புகழ்

தாரணி மாணிக்கப் பூர்ஹசன் குத்தூசு
சந்ததி ஷாஹுல் ஹமீது—அவாள்
சன்னி தானத்தினும் ஈசுபொலி மக்காம்
சியாரத் தோதி வா இப்போது—நித்தம்

சீரணிந் திலங்கும் செய்யிது முகம்மது
செந்தமிழ் பாடியும் வந்தோம் ரெயில்மீது
பேரணி யூர்அதி வீர ராமன் இது
பிந்தாதர
விந்தந்திரு
எந்தன்மனை
வந்தேயிரு —மேனகை.

— முற்றிற்று —

பிஸ்மில்லாஹி
அதிவீரராமன் பட்டினம்
புராதன வித்வ குல ரத்னம்
ம-ா-ா-ஸ்ரீ நவரத்ன கவி
காதிறு முகியித்தீன் அண்ணாவியாரவர்கள்
தேக வியோமடைந்ததற்கு ஆற்றாது ஷயாரின் குமாரர்
செய்யிது முகம்மது அண்ணாவியார் அவர்கள்
இயற்றிய சரம கவிகள்

கொச்சகக் கலிப்பா

கானகத்தில் நீரழைத்த
காமில் முகம்மதரின்
தீனகத்தில் யான்ஜனித்துச்
செய்தவக் குறைமுடித்து
ஞானகத்தின் உட்பொருளை
நன்குணர்ந்து பூவிழந்து
வானகத்திற்(கு) ஏகஇன்று
வாரம்புக ரானதென்றீர்!

உற்றாரைச் சூழிருத்தி
உறவினரைப் பின்னிருத்தி
பெற்றோரை யும்பேரர்
பெண்டீரை முன்னிருத்திக்
''கத்தன்தனைத் தொழுமின்!
ஹறாஞ்செயலை விட்டொழிமின்!
நித்தம் பகையொழிமின்''
நிகழ்த்தி மறைந்தீரே!

மூவாசையும் மறந்து
மோனசுக ஞானநிலை
மேவாசையுங் கலிமா
விண்டு ஈமானுடனே
தேவாசை வைத்துச்
செகமிழந்து பொன்னுலகின்
பூவாசை எண்ணியல்லோ
போனீரெம் புண்ணியரே!

கல்விக் களஞ்சியமே!
கற்பனைக்கோர் உற்பணமே!
செல்வியுறும் பொக்கிஷமே!
தேசிகர் இலக்கியமே!
சொல்விற் பனம் மணியே!
தோன்றுகற்ப தீபகமே!
இல்விசனம் போக்கியிப்போ(து)
ஏகுகின்றீர் பொன்னூர்க்கே!

தேடக் கிடைக்காத
திரவியமே தெள்ளமுதே
நாடக் கிடைக்கா
நவரத்ன மாமணிநின்
பாடக் கிடைக்காப்
பயன்பெறுவ(து) எக்காலம்
கூடக் கிடைக்காக்
குறையென்கோ எந்தையரே!

எங்கள் குலக்கொழுத்தே
　　என்னுயிரே கண்மணியே
தங்கள் தலைமையிழக்கத்
　　தகுமோயென் தந்தையே நும்
பொங்குகல்வி வாய்மைப்
　　பொருப்பின் புயம்பதமும்
திங்கள் முகந்தன்னைத்
　　தரிசிப்ப தெந்நாளோ !

மாறுதில்லை உன்னுருவம்
　　மறக்குதில்லை உன்வசனம்
மீறுதில்லை உன்புகழ்போல்
　　மேதினியில் யாவருக்கும்
ஆறுதில்லை நீயிறந்த
　　யாதனை சூள் சென்னெருப்பின்
தேறுதில்லை சொல்லநின்போல்
　　ஜெனிப்பவர்யார் எந்துரையே !

ஷறஹு நெறியோம்பும்
　　ஷாபி மதுஹபினுள்
அறபுக் கிரந்தம்
　　அத்தனையும் ரத்தினமாய்
நிறப்பாந் தமிழ்ப்பிரபந்தம்
　　நின்போல் பிக்ஹுமாலைப்
பிறப்பாரோ பாடுதற்குன்
　　பேட்டியினிக் காண்பதெப்போ !

ஆவியுங் கண்ணாய்
        அருமருந்(து)என் அண்ணாசஞ்
சீவியை இழந்தமனத்
        தீயினங்கள் மாறுமுனம்
மேவிக் கடுங்காரம்
        விரணமதில் இட்டாற்போல்
தீவினை மறாதெழுப்பிச்
        சேர்ந்தீர்சேண் எந்தையரே!

திருமான்மி யங்கள்பெறும்
        செல்வர்களின் முன் உதித்த
மருமான் தனையிழந்து
        மதியிழந்து கண்மாழ்கிக்
கருமான் மறியைவிட்டுக்
        கரந்தேங்கும் வாற(து) அந்தப்
பெருமான் தனைக்காணப்
        பிரிந்(து)அங்கு சென்றனையோ!

கான்இழந்த பூவாய்க்
        கதிர்இழந்த வான்போலாய்
மான்இழந்த கன்றாய்
        மரம்இழந்த புள்ளினமாய்த்
தேன்இழந்த ஈப்போல்
        தியங்குகிறோம் பாலர்களும்
கோன்இழந்த பதிபோல்
        குலமும் புலம்பாதோ!

—முற்றிற்று—

## ஷையார் பேரில் கல்வெட்டு என்னும் விருத்தம்

### சரம கவி

ஏகாந்த மானபரி பூரண ஆனந்த
இன்பசுக வாரி மயமாய்
எங்கணுஞ் செறிந்தபுகழ் சச்சி தானந்தத்(து)
எழுந்தருள் பரஞ் சோதியின்
இரட்ச காருண்ய புவனந் தாங்கு செங்கோல்
இயற்றுநகர் மதினா வினுக்(கு)
எழுந்தருளி மஹ்மூதர் ஹிஜ்ரத்(து) ஆயிரத்(து)
எட்டு நாற்பத்து மூன்றினில்
எம்பிரான் சற்கருணை நோன்புபின் நியமங்களும்
ஏற்றமிகு ஹஜ்இன்பமும்
எய்திடும் பரகதித் திங்கள் ஷவ்வால்
திகதியீரிரண் டானதின்நேர்
இங்கிலீஷ் பரிவற் சரம்பத்து நவ நூறில்
அமைந்து மதிடிசம்பர்
இடுதி கதியொன்று விசுவாசு வருடத்தில்
இலங்குகார்த் திகையின் மாதம்

பூகாந்தம் மேவிவளர் திகதி பதினேழ்
வெள்ளி பூர்வபட்சஞ் சஷ்டியும்
புகழ்ஓணத் துருவமும் பாலவங் கரணமும்
புயலோசை சாத்து விகமும்
போன்றபகல் மணியொன்றை மீன ராசியிப்
புண்யசுப யோகம் வாய்ந்த
புட்கரம்அமர் நாளில் புட்ப சாரங்கள் நுகர்
புள்எகினமுங் கண்படும்

பொழில்கற் பகாவும் செறி அதிவீர ராமன்நகர்
புராதன கவிப்பிர சங்கி
புவனிடத முத்தமிழ் இலக்கண இலக்கியப்
பொற்பலங் காரக் கும்பம்
போதாந்த கல்விப் பிரவாக சயிலத்தின்மேற்
பொருந்து கற்பூர தீபம்
பூமகளின் சற்குணங் கலைமகள் இருப்பிடம்
பொழிமதக் கவிகுஞ்சரம்

தாகாந் தெதிர் வீறுகவி பகருவோர்வாய்
தறித்தெறியும் வச்ராயுதம்
சகலகலை இலட்சண சுலட்சண விசட்சண
சங்கத்(து)எழுந்த சிம்மம்
சர்வ சமரசம் அமிர்தமதுர கவிராஜேந்த்ர
சந்ததி தமிழ்ப் பொக்கிஷம்
ஜயஜீவ ரத்தினக் கவிச்சக்ர வர்த்திவழி
தன்னிரு கண்மணிய தாயும்
ஜன்ம சாபல்யம் வளர்சொர்ண கவிவாணரின்
தந்திரி மைத்துனரு மாகித்
தலைமை பெறவந்து பிரபந்தங்களும் கணித
சாத்திர புராண கலையும்
சம்ப்ராய சம்பன்ன விற்பன்ன விவேகமுறு
சற்புருஷ ரத்ன மணியாய்
தத்துவம் மிகுந்த காரணத் திடைபதித்த
நவரத்ன கவிப் பிரசாது

யோகாந்த மோட்சபதி செய்திடுங் காதிறு
முகிய்யித்தீன் அண்ணாவியோர்ந்(து)
உளபருவ லபிதமுடிவு எண்பத் திரண்டு
நிறைவுற்றவை யறிந்து மைந்தர்
உற்றவர்கள் பாரகலை கற்றவர்கள் முற்றுமுள
ஒக்கலொடு மித்ரர் பேரர்

ஒருங்குடன் நெருங்கிட மருங்குற விழித்து
வசனங்கள் மதியுண்மை
மோதிறுதி யாகின பின்மோன சுகஞான
நிலையுள்ள பொருளாதி வரனை
யொப்பகம் இருந்தலரி மானொடு பொதிந்து
கலிமாவினையும் உடனமர்த்தி
யுகம்விடுத் துனது தரிசனம் அடுத்துறுதலால்
உயர்சொர்க்கம் பிர் தௌசெனும்
உன்னதப் பதவியருள் யாக்கறீமுல்
மஜீதுல் ஃகபூருற் றஹீமே !

## ஷியார் பேரில்
## சரம கவிகள்

அதிவீர ராமனகர் அண்ணாவி யார்குலமன்
பதிவீர ராஜகலைப் பண்டிதராம்—மதிவீரம்
மெய்க்கு நவரத்னகவி மேதினி துறந்துபுகழ்
ஹக்கிடம் அடைந்தார் கதி.

திருவிளங்குஞ் செல்விநகர்த்
திறம்விளங்கும் நற்புலமைத்
தருவிளங்கும் வித்தாகத்
தரைவிளங்கு மாண்புடைய
குருவிளங்கும் அண்ணாவிக்
குலம்விளங்கும் பேற்றினுக்காய்
உருவிளங்கும் வாலறிவல்
உயர்நவரத் தினக் கவியார் !

சார்ந்தகுணம் பொறையுஞ்
சான்றாண்மை யுந்தயையும்
நேர்ந்த நலம்எவையும்
நிறைந்தவொரு பொக்கிஷமாய்த்

தேர்ந்த கலையறிவுந்
தெள்ளியநல் வாய்க்கனிவும்
சேர்ந்த தரம்எவைக்கும்
ஜெயநவரத்தின கவியார் !

நலத்தேறும் நம்மிஸ்லாம்
நபிபெருமா னார்வழுத்தும்
நிலத்தேறு நற்சரியை
நெறிவழுவா நிலையுடைய
புலத்தேறு வணக்கநிலைப்
பொழுதுமுறை யகலாதார்
குலத்தேறு தவமகிமைக்
குணநவ ரத்னதி கவியார் !

இருவினையி னான
இனம்பகுக்கும் இவ்வுலகர்
தருவினைக ளெல்லாம்
ஜலமெழுப்புஅற் புதமனைய
கருவினையென் றாய்ந்தகத்திற்
கதிபெறுமெய்ஞ் ஞானஅறிவால்
ஒருவினையின் ஊடமர்ந்த
ஒளிர்நவரத்தின கவியார் !

நல்லறிஞர் அகத்தினிய
நாற்கவியிற் பலபனுவல்
சொல்லரிய தாய்இயற்றிச்
சூழ்ந்தபுகழ் வாய்த்தவராம்
வெல்லரிய தானபல
வித்துவத்தி லேதழைத்த
தொல்லறிஞர் குலம்விளக்குஞ்
சுடர்நவரத்தின கவியார் !

பொருள்சிறக்கும் இலக்கியம்சேர்
புராணபல காவியத்தின்
மருள்சிறக்கும் பாக்களையும்
வதைதெரிக்கும் வன்மையதாய்த்
தெருள்சிறக்கும் பிரசங்கம்
தெள்ளமிர்தம் எனப்பொழியும்
அருள்சிறக்கும் பேறறிவால்
அமர்நவரத் தினகவியார்!

துதிபுனைந்த நம்மார்க்கத்
துறைநெறிகள் ஒருங்கமைத்து
விதிபுனைந்த முறையெவையும்
விரித்தருள் பிக்ஹுமாலை
கதிபுனைந்த நூலதைப்போற்
காணரிய தெனவுலகின்
மதிபுனைந்த கலைவலியார்
மகிழ்நவரத் தினகவியார்!

இன்னபல தரங்கள்
இசைந்தபடி வாய்த்திருந்த
மன்னன் நவரத்னகவி
மான்காதிறு முகிய்யித்தீன்
சொன்னயஅண் ணாவியர்க்குத்
தொடர்பவங்கள் தீர்த்துனது
நன்னய லிக்காஅருள்வாய்
நலம்புரக்கும் றகுமானே!

— முற்றிற்று —

இங்ஙனம்
லே. முய்யித்தீன் பகீர்
அதிவீரராமன்பட்டினம்

